**SRI A. VEDARATHNAM**: காவேரியில் 'முறை' அமைப்பது காரணமாக விவசாயத்திற்குத் தண்ணீர்த் தட்டு ஏற்பட்டு, அதனால் விவசாயம் பெரும் அளவு பாதிக்கப்பட்டு விட்டதே, அம்மாதிரி இனிமேலாவது விவசாயம் பாதிக்கப்படாத அளவில் அவர்களுக்குப் போதுமான தண்ணீர் 'சப்ளை' செய்வதற்கு உத்தரவு இடப்படுமா?

**THE HON. SRI P. KAKKAN**: மேட்டூரில் தண்ணீர் குறைவாக இருந்தால், 'டர்ன் சிஸ்டம்' கையாளப்படுகிறது. மற்ற சமயங்களில் 'டர்ன் சிஸ்டம்' இருக்காது.

*Cement*

* 290 Q.—**SRI A. VEDARATHNAM**: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் சிமிட்டி ஏற்றுமதி சம்பந்தமாய் ஏற்படுத்தியிருக்கும் ஸோனல் திட்டத்தை மாற்றி அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

(இ) அப்படியானால், அதன் விவரம் என்ன?

**THE HON. SRI P. KAKKAN**: (அ) No, Sir.

(இ) Does not arise.

**SRI A. VEDARATHNAM**: இப்போது திருச்சிக்கு வெகு அருகாமையில் இருக்கிற தஞ்சாவூருக்கு திருநெல்வேலியில் இருந்து சிமிண்டு சப்ளை செய்யவேண்டும் என்று ஸோனல் கவுன்சிலில் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதனால் உரிய காலத்தில் சப்ளை செய்யபபடாமல் காலதாமதம் ஏற்படுவதோடு சப்ளை கிடைப்பதும் கிடையாது. ஆகவே அடியோடு அந்த ஏற்பாட்டை ரத்து செய்ய முன்வருவார்களா? அல்லது அந்தந்த ஜில்லாக்களுக்கு சமீபத்தில் இருக்கிற பாக்டரியில் இருந்தே சப்ளை செய்ய உத்திரவிடுவார்களா?

**THE HON. SRI P. KAKKAN**: இதுபற்றி எந்த ஜில்லாவுக்கு எந்த இடத்தில் இருந்து சப்ளை கொடுத்தால் வசதியாக இருக்கும் என்று விவரம் கொடுத்தால் கவனிக்கப்படும்.

**SRI K. B. S. MANI**: தஞ்சாவூருக்குப் பக்கத்தில் இருக்கிற திருச்சி டால்மியாபுரத்தில் இருந்து சிமிண்டு பெற கோட்டா கொடுத்தால்—விலையில் ஒன்றும் அனுகூலம் இல்லாவிட்டாலும்—காலாகாலத்தில் பெறுவதற்கு வசதி இருக்கும். ஆகவே அதை உத்தேசித்தாவது பரிசீலனை செய்து தாளையூத்துக்குக் கொடுக்கப்பட்ட கோட்டாவை ரத்து செய்து இங்கே கொடுக்க ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI P. KAKKAN**: விலை எல்லா இடத்திலும் ஒரே மாதிரிதான் இருக்கும். பக்கத்தில் கொடுக்கவேண்டும் என்று சொன்னால் அதைப் பரிசீலனை செய்கிறேன்.